



ஸ்ரீ பகவத்பாதர்கள் ஸ்தாபித்த

# ஸ்ரீமடங்களின் விவரம்





போலகம் சாஸ்த்ரரத்னகர

ஸ்ரீராம சாஸ்திரிகள்

எழுதியது






॥ श्रीः ॥

॥ श्रीगुरुभ्यो नमः ॥

# ஸ்ரீ பகவத்பாதர்கள் ஸ்தாபித்த ஸ்ரீமடங்களின் விவரம்

# நாலு மடங்கள்தான் என்று கதை கட்டியவரின் வரலாறு

*எழுதியவர்*
போலகம் சாஸ்த்ரரத்னாகர
ஸ்ரீராம சாஸ்திரிகள்



ஸ்ரீ காமகோடி ப்ரதீபம் வெளியீடு
*4, பிரான்ஸிஸ் ஜோஸப் தெரு, சென்னை-1.*

உ

॥ श्रीगुरुभ्यो नमः ॥

ஸ்ரீ பகவத்பாதர்கள் ஸ்தாபித்த ஸ்ரீமடங்களின் விவரம்

# நாலு மடங்கள்தான் என்று கதை கட்டியவரின் வரலாறு



## 1. சிவரஹஸ்யம்

ஸ்ரீ பகவத்பாதர்களுடைய சரித்திரத்தைக் கூறும் க்ரந்தங்களுள் மிகப் பழமையானது சிவ ரஹஸ்யம் என்ற இதிஹாஸரத்னம். அதில் 9-ஆம் அம்சம் 16-ஆவதான சங்கரப்ராதுர்பாவாத் யாயத்தில் சங்கர சரித்திரம் கூறப்படுகிறது. அங்கே கடைசியிலுள்ள,

तद्योगभोगवरमुक्तिसुमोक्षयोगलिङ्गार्चनात्प्राप्तजयः स्वकाश्रमे ।
तान्वै विजित्य तरसाऽक्षतशास्त्रवादैः मिश्रान् स काञ्च्यामथ सिद्धिमाप ॥

என்ற ச்லோகத்தில், (1) காஞ்சியில் ஆசார்யருக்கு ஓர் ஆச்ரமமுண்டென்றும், (2) கைலாசத்தில் பரமேச்வரன் கொடுத்த யோகம், போகம், வரம், முக்தி, மோக்ஷம் என்ற ஐந்து ஸ்படிக லிங்கங்கள் ஆசார்யரால் பூஜிக்கப்பட்டன என்றும், (3) கடைசியில் ஆசார்யர் காஞ்சியில் ஸித்தியடைந்தார்கள் என்றும் கூறப்பட்டிருக்

கிறது. ஆகவே பழைய சிவரஹஸ்யப்படிகாஞ்சியில் ஆசார்யரின் மடம் ஒன்று உண்டு என்பது ஸ்பஷ்டமாகத் தெரிகிறது.

## 2. மார்க்கண்டேய ஸம்ஹிதை

மார்க்கண்டேய ஸம்ஹிதையில் 72-ஆம் கண்டம் 7, 8-ஆவது பரிஸ்பந்தங்களில் ஆசார்ய சரித்ர வர்ணனம் செய்யுமிடத்தில், (1) ஆசார்யர் கைலாசத்திலிருந்து கொண்டுவந்த ஐந்து ஸ்படிக லிங்கங்களுள், சிதம்பரத்தில் மோக்ஷலிங்கம், கேதாரத்தில் முக்திலிங்கம், நீலகண்டேச்வர க்ஷேத்ரத்தில் வரலிங்கம், காஞ்சியிலுள்ள காமகோடி பீடத்தில் யோகலிங்கம், ச்ருங்கேரியிலுள்ள சாரதா பீடத்தில் போகலிங்கம், இவ்விதம் ஐந்து லிங்கங்களையும் ஸ்தாபித்துப் பூஜிக்கும்படி ஏற்பாடு செய்ததாயும், (2) ஸுரேச்வராசார்யரைக் காஞ்சி காமகோடி பீடத்திலும், பத்மபாதாசார்யரை ச்ருங்கேரி சாரதா பீடத்திலும் ஸ்தாபித்ததாகவும், (3) காஞ்சியிலேயே ஆசார்யர் ஸித்தியை அடைந்ததாகவும் கூறப்பட்டிருக்கிறது. ஆகவே சிவரஹஸ்யத்தை விட அதிகப்படியாக இதில் ச்ருங்கேரி, காஞ்சி இரண்டிடங்களில் முறையே பத்மபாதர், ஸுரேச்வரர் என்ற இரு சிஷ்யர்கள் வஸிக்கின்ற இரண்டு மடங்களை ஆசார்யர் ஸ்தாபித்தார் என்ற விஷயம் கூறியிருப்பதுடன், ஐந்து லிங்கங்கள் இன்ன இன்ன இடங்களில் ஸ்தாபிக்கப்பட்டன என்ற விவரமும் தெளிவாகக் காண்கிறது.

## 3. ஆனந்தகிரி சங்கரவிஜயம்

ஆனந்தகிரி சங்கரவிஜயத்தில் முன்பு மார்க்கண்டேய ஸம்ஹிதையில் கூறப்பட்ட விவரங்கள் அதாவது, (1) ஐந்து லிங்கங்களை அந்த அந்த இடத்தில் ஸ்தாபித்தது, (2) ச்ருங்ககிரியில் பத்மபாதரையும், காஞ்சியில் ஸுரேச்வரரையும் ஸ்தாபித்தது, (3) காஞ்சியில் ஆசார்யர் ஸித்தி அடைந்தது என்ற வரலாறுகளைக் கூறுவதுடன், (1) ஸுரேச்வரர் வஸிக்கும் காஞ்சி பீடத்தில் உள்ள ஆசார்ய பரம்பரை இந்திர ஸரஸ்வதீ ஸம்ப்ரதாயத்தை உடையது என்றும், (2) ஆசார்யர் திக்விஜயம் செய்து, 72 துர்மதங்களைக் கண்டித்தார்கள் என்றும், (3) ஆசார்யர் காஞ்சி மடத்தில் இருந்து கொண்டு தம் சிஷ்யர்களைப் பல இடங்களுக்கு அனுப்பி, வைதிகமான சைவம் முதலிய ஷண்மதங்களை ஸ்தாபிக்கும்படி ஆக்ஞாபித்தார்கள்; அவர்களும் ஆசார்யரின் உத்தரவுப்படி ஷண்மதங்களை ஸ்தாபித்துவிட்டுக் காஞ்சி மடத்திலுள்ள ஆசார்யரிடம் தெரிவித்தார்கள் என்றும், இதுபோன்ற பல விஷயங்கள் கூறப்பட்டிருக்கின்றன. ஆகவே, மார்க்கண்டேய ஸம்ஹிதை, ஆனந்தகிரி சங்கரவிஜயம் என்ற இரண்டு க்ரந்தங்களின் மூலம், ச்ருங்கேரி, காஞ்சி என்னும் இரண்டு க்ஷேத்திரங்களிலும் இரண்டு மடங்கள் உண்டு என்று தெரிய வருகிறது.

ஆனந்தகிரீயத்தில், ஆசார்யர் ஸர்வக்ஞபீடாரோஹணம் செய்த விவரம் கூறப்படவில்லை.

ஆசார்யர் மண்டனமிச்ரர் என்ற மற்ருெரு பெய ரால் அழைக்கப்படுகிற ப்ரஹ்மாவதாரமான விச்வ ரூபரை வாதத்தில் வென்ற பிறகு அவருடைய பத் தினியும் ஸரஸ்வதியின் அவதாரமுமான உபயபாரதீ என்ற ஸரஸவாணியையும் வாதத்தில் ஜயிக்க விரும்பி அவளுடன் வாதம் செய்யும்பொழுது அவ ளது காம சாஸ்த்ர ஸம்பந்தமான கேள்விகளுக்கு அமருகன் என்ற ராஜ சரீரத்தில் பரகாய ப்ரவேச மென்கிற யோக சக்தியால் ப்ரவேசித்து அந்த அரசனின் பத்தினிகளின் ஸம்பந்தத்தால் காம சாஸ்த்ர நுட்பங்களே அறிந்து விடையளித்து. ஜயித்து அவளே வனதுர்க்காமந்திரத்தால் கட்டி ப்ரஹ்மலோகம் போகாமல் தடுத்து ச்ருங்கேரிக்கு அழைத்துபோய்ப் பிரதிஷ்டை செய்து அவளேப் பூஜிக்கும்படி சிஷ்யர்களே ஏற்பாடு செய்தாரென்று கூறப்பட்டிருக்கிறது.

## 4. பதஞ்சலி சரிதம்

ராமபத்திர தீக்ஷிதர் எழுதிய பதஞ்சலி சரித காவியத்தில் பதஞ்சலி சிஷ்யரான கௌடபாதா சார்யர், அவரது சிஷ்யரும் பதஞ்சலியின் அவதார முமான கோவிந்த பகவத்பாதர் இவர்களுடைய சரித்திரம் விஸ்தாரமாகக் கூறப்பட்டு, பிறகு ஆசார்யரின் சரித்திரம் கூறும்பொழுது,

“अद्वैतभाष्यमुपकल्प्य दिशो विजित्य
काञ्चीपुरे स्थितिमवाप स शङ्करार्यः ।”

என்ற முடிவு ச்லோகத்தில், ஆசார்யர் பாஷ்யங்களை இயற்றி, திக்விஜயம் செய்துவிட்டுக் காஞ்சீபுரத்திலேயே தங்கியிருந்தார்களென்று கூறியிருப்பதால் காஞ்சியில் ஆசார்யரின் மடம் உண்டென்றும், பிறகு காஞ்சியிலேயே ஆசார்யர் ஸித்தியடைந்தார் என்றும் தெரியவருகிறது. ச்ருங்கேரி மடத்தைப்பற்றி ராமபத்திர தீக்ஷிதர் ஒன்றும் கூறவில்லை.

## 5. சங்கராப்யுதயம்

ராஜசூடாமணி தீக்ஷிதர் இயற்றிய சங்கராப்யுதயத்திலும், ஆசார்யர் ச்ருங்கேரியில் மடம் ஸ்தாபித்த வரலாறு கூறப்படவில்லை. ப்ருஹஸ்பதியின் அவதாரமாக விச்வரூபரைக் குறிப்பிட்டு அவரை வாதத்தில் ஆசார்யர் ஜயித்த பிறகு ஸரஸ்வதியின் அவதாரமும், அவரது பத்தினியுமான உபயபாரதீ ப்ரஹ்மலோகம் சென்றதாகக் கூறப்பட்டிருக்கிறது. பிறகு காஞ்சியில் ஸமஸ்த வாதிகளையும் ஜயித்துவிட்டு அங்குள்ள வித்யா பத்ராஸனம் என்ற ஸர்வக்ஞ பீடத்தில் ஆசார்யர் ஏறும் ஸமயத்தில் காம சாஸ்த்ர ஸம்பந்தமான கவிதையில் தன்னை ஜயிக்காமல் ஸர்வக்ஞ பீடம் ஏறக்கூடாதென்று தடுத்த ஸரஸ்வதியினிடம் ஏற்கனவே ஒரு ஸமயம் பரகாய ப்ரவேச சக்தியால் அமருக சரீரத்தில் ப்ரவேசித்து அறிந்து எழுதிய காம சாஸ்த்ர ஸம்பந்தமான நூறு ச்லோகங்களைக் காட்டி அவளை ஜயித்துவிட்டு ஸர்வக்ஞபீடாரோஹ

ணம் செய்து காமாக்ஷியைப் பூஜித்துக்கொண்டு காஞ்சியிலேயே தங்கிவிட்டதாக,

" कम्पातीरनिवासिनीमनुदिनं कामेश्वरीमर्चयन्

ब्रह्मानन्दमविन्दत त्रिजगतां क्षेमङ्करश्शङ्करः ।"

என்ற கடைசி ச்லோகத்தில் கூறப்பட்டிருக்கிறது. இதனால் காஞ்சியில் ஆசார்யரின் மடமுண்டென்றும், பிறகு அங்கேயே ஆசார்யர் ஸித்தியடைந்தார் என்றும் சங்கராப்யுதயத்தால் தெரியவருகிறது. **சங்கராப்யுதயத்தில் மற்றொரு விசேஷம்:** பட்டபாதருக்கு மண்டனமிச்ரர், விச்வரூபர் என்ற இரு சிஷ்யர்கள் உண்டென்றும், பட்டபாதர் ப்ரயாக க்ஷேத்ரத்தில் தாம் பௌத்த மதத்தைப் பௌத்தர்களிடம் படித்து அவர்களையே நாசம் செய்த குற்றத்துக்காகத் துஷாக்னி ப்ரவேசம் செய்யும் பொழுது மண்டனமிச்ரர் அவர் பக்கத்தில் இருந்தார் என்றும், விச்வரூபர் அவ்விடமில்லை என்றும், அவரிருப்பிடமான மகத தேசம் போய் ஆசார்யர் பட்டபாதர் அபிப்பிராயப்படி விச்வரூபரை வாதத்தில் வென்று ஸந்நியாஸாச்ரம ஸ்வீகாரம் செய்வித்து ஸுரேச்வரர் என்று பட்டத்தையும் கொடுத்தார் என்றும் சங்கராப்யுதயத்தால் தெரிகிறது. இதை அநுஸரித்தே ப்ரஹ்மஸ்ரீ மஹாமஹோபாத்யாய குப்புஸ்வாமி சாஸ்திரிகள், M. A. அவர்களும் ப்ரஹ்ம ஸித்தியின் முகவுரையில் 'மண்டனமிச்ரர் வேறு, ஸுரேச்வரர் வேறு' என்று நன்கு ஸ்தாபித்துள்ளார்.

## 6. வ்யாஸாசலீயம்

வ்யாஸாசலீய சங்கரவிஜயத்தில் சங்கராப்யுதயத்தில் கூறியபடியே மண்டனமிச்ரர் வேறு, விச்வரூபர் வேறு என்றே கூறப்பட்டிருக்கிறது. விச்வரூபரை வாதத்தில் ஜயித்த பிறகு அவரது பத்தினியான உபயபாரதீ ப்ரஹ்மலோகம் போய்விட்டதாகவே இங்கும் கூறப்பட்டிருக்கிறது. ஸுரேச்வரருக்கும் பூர்வாச்ரமத்தில் மண்டனமிச்ரர் என்ற பெயர் உண்டு என்பது ஆனந்தகிரீயம், மாதவீயம் முதலிய சங்கரவிஜயங்களினுல் தெரியவருகிறது. ஆகவே இரு மண்டனமிச்ரர்கள் உண்டு என்று தீர்மானமாகத் தெரிகிறது.

"मोहसन्तमसवासरनाथान् तत्रतत्र विनिवेश्य विनेयान् ।
पालनाय परतत्वसरण्याः मामुपैष्यसि ततः कृतकृत्यः ॥"

'அஞ்ஞானமாகிற இருளைப் போக்கடிப்பதில் ஸூர்யனுக விளங்கும் சிஷ்யகணங்களைப் பரதத்துவ மார்க்கத்தைப் பரிபாலனம் செய்யும்பொருட்டுப் புவியில் அந்த அந்த இடங்களில் ஸ்தாபித்துவிட்டு, க்ருதக்ருத்யனுகிப் பிறகு என்னை வந்து அடைவாய்' என்று காசியில் ஆசார்யரைப் பரீக்ஷிக்கும் பொருட்டுச் சண்டாள ரூபத்தில் தோன்றிப் பிறகு ப்ரத்யக்ஷமான விச்வேச்வரர் ஆசார்யரை அநுக்ரஹித்ததாக வ்யாஸாசலீயத்தில் நான்காவது ஸர்க்கத்தில் கூறப்படுவதால், ஆசார்யர் கணக்கற்ற சிஷ்யர்களை ஆஸேதுஹிமாசலம் பாரத பூமியில்

பல இடங்களில் ஸ்தாபித்துப் பல மடங்களை ஏற்படுத்தினுரென்று தெரியவருகிறது. நான்கு இடங்களில் என்று கூருமல் 'तत्र तत्र'—அந்த அந்த இடங்களில்' என்று கூறியிருப்பதை இவ்விடம் வாசகர்கள் கவனிக்க வேண்டும். அதனுலேயே இன்றைக்கும் பாரத பூமியில் வடக்கிலும் தெற்கிலும் பல க்ஷேத்திரங்களில் கணக்கற்ற பல சங்கர மடங்கள் இருப்பது ப்ரத்யக்ஷமாகத் தெரிகிறது. அவற்றுள் இதுதான் ஆசார்யரால் ஸ்தாபிக்கப்பட்டது, இது பிறகு ஏற்பட்டது என்று சொல்லத் தகுந்த நம்பத் தக்க ப்ரமாணங்கள் இல்லாததனுல் எல்லா மடங்களுமே ஆசார்யர் காலத்தில் ஏற்பட்டவை என்று தெரியவருகிறது.

வ்யாஸாசலீயம் 12-ஆம் ஸர்க்கத்தில் பின்வருமாறு கூறப்படுகிறது:— ஜம்பூத்வீபத்தில் பாரத மண்டலமும், அதில் காச்மீரமண்டலமும் ப்ரசஸ்தம். அதில் சாரதாதேவி வஸிக்கிருள். அங்கே தேவியின் ஆலயத்தில் ஸர்வக்ஞபீடம் நான்கு திக்குகளிலும் நான்கு துவாரங்களுடன் விளங்குகிறது. அதில் ஆசார்யருக்குமுன் மூன்று த்வாரங்களின் வழியாக மூன்று திக்குகளிலிருந்தும் பண்டிதர்கள் வந்து வாதத்தில் பண்டிதர்களை ஜயித்து ஸர்வக்ஞபீடத்தில் ஏறினுர்கள். தெற்கு த்வாரத்தின் வழியாகத் தெற்கிலுள்ள ஒரு பண்டிதராவது வந்து ஸர்வக்ஞ பீடம் ஏறவில்லை என்ற வதந்தியை ஆசார்யர் கேள்வியுற்று, தாக்ஷிணுத்ய பண்டிதர்களின் கௌரவத்தைக் காப்பாற்றுவதற்காகக் காச்மீர

தேசம் போய் ஸர்வக்ஞபீடாரோஹணத்துக்காக யத்தனிக்கையில் பல வித்வான்கள் வந்து பல சாஸ்திரங்களில் ஆசார்யருடன் வாதம் செய்தார் கள். அவர்கள் எல்லோரையும் ஆசார்யர் ஜயித்து விட்டு ஸர்வக்ஞபீடத்தில் ஏறப்போகும்பொழுது ஸரஸ்வதி அதைத் தடுத்து, 'எல்லா வித்யைகளி லும் நீர் என்னிடம் பரீக்ஷை கொடுத்தபிறகுதான் ஸர்வக்ஞபீடம் ஏறவேண்டும்' என்று சொல்லி எல்லா வித்யைகளிலும் பரீக்ஷை செய்தாள். ஆசார்யர் அதற்கு விடையளித்தார். பிறகு காம சாஸ்த்ர ஸம்பந்தமான கேள்விகளை ஸரஸ்வதி தேவி கேட்க, தேவியினிடம் 7-தினங்களில் பதில் கூறுவதாக உத்தரவு பெற்றுக்கொண்டு பரகாய ப்ரவேச சக்தியால் ஓர் அரசனின் சரீரத்தில் ப்ரவே சித்து அரசபத்தினிகளின் ஸம்பந்தத்தால் காம சாஸ்த்ர விஷயங்களை அறிந்து, மறுபடியும் தம் சரீரத்தில் ப்ரவேசித்து, ஸரஸ்வதியினிடம் அவ் விஷயங்களைத் தெரிவித்த பிறகும், 'ஸ்திரீ ஸம்பந் தத்தால் அசுத்த சரீரமுடைய நீர், ஸர்வக்ஞபீடம் ஏறுவது உசிதமில்லை' என்று தடுக்க, 'எனக்கு வேறு சரீரத்தில் ஸ்திரீஸம்பந்தம் ஏற்பட்டதே தவிர, இந்த யதி சரீரத்தில் இல்லை. அதனால் தோஷம் கூற இயலாது' என்று ஆசார்யர் கூற, தேவி ஸம்மதிக்க, ஆசார்யர் ஸர்வக்ஞ பீடம் ஏறினர்; எல்லோராலும் கொண்டாடப்பட்டார் என்று, வ்யாஸாசலீயத்தில் கூறிவிட்டு, ஆசார் யர் பிறகு 'रुचितदेशमयं जगाम' இஷ்டமான தேசம் போய்விட்டார்கள் என்று முடிக்கப்பட்டிருக்கிறது.

இவ்விடத்தில் காச்மீரமண்டலமென்பது காஞ்சி மண்டலமென்று வ்யாஸாசலீயத்தை அநுஸரித்து எழுதப்பட்ட கோவிந்தநாதீயம் என்ற கேரளீய சங்கரவிஜயத்தில் கூறப்பட்டிருப்பதால், ஆசார்யர் ஸர்வக்ஞபீடாரோஹணம் செய்தது காஞ்சியில் என்று தீர்மானிக்கப்படுகிறது. இஷ்டமான தேசம் போனுர் என்று அங்கே கூறியது கைலாஸத்தைத் தான் என்று சொல்ல வேண்டும். வேறு தேசமாக இருந்தால் இன்ன தேசம் என்று அவசியம் கவி கூற வேண்டும். கூருது போனுல் ஆகாங்க்ஷாசாந்தி வாசகர்களுக்கு ஏற்படாது. ஸர்வஸங்கபரித்யாகிகளான ஆசார்யபாதருக்கு இஷ்டமான தேசம் வேறு எதுவும் இருக்க நியாயமில்லை. ஆகையால் காஞ்சியிலேயே ஆசார்யர் ஸித்தியடைந்தார் என்றும் தெரியவருகிறது. கைலாசம் சென்ருர் என்பதற்கு, ஸித்தியடைந்தார்கள் என்றே பொருள். அதனுலேயே காஞ்சியில் வஸித்த ஆசார்யருக்குக் காஞ்சியில் ஓர் மடம் உண்டென்றும் தெரிகிறது. சங்கரர் என்ற ஓர் மஹா வ்ருக்ஷம் பல சிஷ்ய ப்ரசிஷ்யர்களாகிய கிளைகளுடன் கூடிய நான்கு ப்ரதான சிஷ்யர்களாகிய பெரும் ஸ்கந்தங்களால் பாரதம் முழுவதும் வ்யாபித்து மக்களுடைய ஸம்ஸார தாபத்தைப் போக்கிக்கொண்டு மோக்ஷம் என்ற பழத்தையுடைய 'ஞானம்' என்னும் புஷ்பத்தையுடையதாய் இருப்பதாகக் கடைசியிலுள்ள,

एकश्शाखी शङ्कराख्यश्चतुर्धा स्थानं भेजे तापशान्त्यै जनानाम् ।
शिष्यैस्स्कन्धैश्शिष्यशाखैर्महद्भिः ज्ञानं पुष्पं यत्र मोक्षप्रसूति ॥

(12-83.)

என்ற ச்லோகத்தில் கூறியிருக்கிறது. ஆகவே மஹாவ்ருக்ஷ ஸ்தானத்திலுள்ள ஆசார்யர் நடு ஸ்தானத்தில் ஓர் மடத்தில் இருந்தார் என்றும், நான்கு ஸ்கந்தங்களின் ஸ்தானத்திலுள்ள ப்ரதான சிஷ்யர்கள் நான்கு திக்குகளிலுள்ள நான்கு மடங்களிலும், அவற்றிலுதித்தபல கிளைகளின் ஸ்தானத்திலுள்ள ப்ரசிஷ்யர்கள் பல இடங்களிலுள்ள பல மடங்களிலும் இருந்தார்கள் என்றும் இவ்விதம் சங்கர வ்ருக்ஷம் பாரதம் முழுவதும் வ்யாபித்து ஜனங்களின் தாபசாந்தியைப் பண்ணுவதாகத் தெரிய வருவதால், ஆசார்யர் இருந்த மடம் ஒன்று, அவர்களின் நான்கு சிஷ்யர்கள் இருந்த மடங்கள் நான்கு, சிஷ்ய ப்ரசிஷ்யர்கள் இருந்த மடங்கள் பல—இவ்விதம் பல மடங்கள் இருந்ததாக இந்த ச்லோகத்தால் தெரியவருகிறது. இவ்விடத்தில் ஆசார்யருக்குத் தனீ ஸ்தானம் தனி மடம் ஒன்று உண்டென்று ஒப்புக்கொள்ளாமல் நான்கு ப்ரதான சிஷ்யர்களுக்கே நான்கு ஸ்தானத்தில் நான்கு மடங்கள் தான் என்று ஒப்புக்கொள்ளுவது, மரம் வேரூன்றி நடுவிலில்லாமல் பல கிளைகளுடன் கூடிய ஸ்கந்தங்கள் மாத்திரம் இருப்பதாக வர்ணிப்பது போல் பொருந்ாது என்பதை வாசகர்கள் அறிய வேண்டும்.

இன்னுமொரு முக்கிய விஷயம் கவனிக்கத் தக்கது. வ்யாஸாசலீயத்தில் பழைய கையெழுத்துப் பிரதிகளிலுள்ளதும், ஸதாசிவப்ரஹ்மேந்த்ரர் எழுதிய ஜகத்குரு ரத்னமாலையின் வ்யாக்யானமான 'ஸுஷமா' என்ற க்ரந்தத்தில் அநுவதிக்கப்

படுவதுமான வ்யாஸாசலீயம் 12-ஆவது ஸர்க்கத்தின் முடிவிலுள்ள ஐந்து ச்லோகங்களுள் முதலாவதான,

"एवं निरुत्तरपदां स विधाय देवीं
सर्वज्ञपीठमधिरुह्य मठे स्वक्लृप्ते ।
मात्रा गिरामपि तथोपगतैश्च मिश्रैः
संभावितः कमपि कालमुवास काञ्च्याम् ॥"

என்ற ச்லோகத்தில் ஆசார்யர் ஸரஸ்வதிதேவிக்குப் பதில் கூறிவிட்டு, ஸர்வக்ஞ பீடாரோஹணம் செய்து, ஸரஸ்வதியாலும் ஸமஸ்த வித்வான்களாலும் கொண்டாடப்பட்டுப் பிறகு காஞ்சியில் தமது மடத்தில் கொஞ்ச காலம் வஸித்தார் என்றும், மூன்றும் ச்லோகத்தில்,

"काञ्च्यां विमुच्य वपुरादृतमिच्छयैव
स्वस्यैव धाम्नि परमे स्वत एव लिल्ये ॥"

"ஆசார்யர் காஞ்சியில் ஸர்வபூஜ்யமான தமது சரீரத்தை ஸ்வேச்சையாகவே விட்டுவிட்டுத் தமது பாரமார்த்திக ஸ்வரூபத்தில் ஐக்கியமானார்கள்; அதாவது ஆசார்யர் காஞ்சியிலேயே ஸித்தியடைந்தார்" என்று ஸ்பஷ்டமாகக் கூறப்பட்டிருக்கிறது.

### 7. கோவிந்தநாதீயம்

கோவிந்தநாதீயம் என்ற கேரளீய சங்கர விஜயம் வ்யாஸாசலரை ஆரம்பத்தில் ஸ்துதி செய்து

கொண்டு உபக்ரமிக்கிறது. அதில் வ்யாஸாசலீயத்தில் கூறியவாறே சங்கரசரித்திரம் கூறப்படுகிறது. விச்வரூபரை ஆசார்யர் வாதத்தில் ஜயித்த பிறகு அவரது பார்யையான ஸரஸ்வதி ப்ரஹ்மலோகம் போய்விட்டாளென்றே அங்கும் கதை வர்ணிக்கப் பட்டிருக்கிறது. கோவிந்தநாதீயம், வ்யாஸாசலீயத்தில் கூறப்பட்ட ஸர்வக்ஞபீடமுள்ள காச்மீரமண்டலம் காஞ்சிமண்டலம்தான் என்று ஸ்பஷ்டமாக விளக்குகிறது. அந்த ச்லோகங்கள் வருமாறு :—

" सर्वज्ञैशिष्यसंयुक्तः शङ्करो देशिकेश्वरः ।
भूमिं प्रदक्षिणीकृत्य भूयः काञ्चीपुरं गतः ॥

जम्बूद्वीपस्य कुर्वाणे शोभां भारतमण्डले ।
शस्तं काश्मीरनामानं देशं विद्योतयद्भृशम् ॥

कामाक्ष्या नाम वाग्देव्याः स्थानं तत्पुरमाप्तवान् ।
तत्रत्यं सर्वविद्वद्भिः पूज्यमानं दिनेदिने ।
सर्वज्ञपीठमारोढुमियेष यतिपुङ्गवः ॥ "

இதன் பொருள்—'ஆசார்யர் சிஷ்யர்கள் சூழப் பூமியை ப்ரதக்ஷிணம் செய்துவிட்டு மறுபடியும் காஞ்சிபுரம் வந்தார். ஜம்பூத்வீபத்துக்குச் சோபையைக் கொடுக்கும் பாரத மண்டலத்தில் காச்மீர தேசம் ப்ரசஸ்தமானது. அந்தத் தேசத்தை மிகவும் ப்ரகாசப்படுத்துவது காமாக்ஷி என்ற வாக்தேவியின் ஸ்தானமான காஞ்சீபுரம். அதை ஆசார்யர் அடைந்து, அங்கு எல்லா வித்வான்

களாலும் ப்ரதிதினமும் பூஜிக்கப்படுகிற ஸர்வக்ஞ பீடத்தில் ஏற அபிப்பிராயப்பட்டார்' என்பது. அங்கே பலவித்வான்களை ஜயித்து ஸரஸ்வதி தேவியின் காமசாஸ்த்ரஸம்பந்தமுள்ள கேள்விகளுக்கும், பரகாய ப்ரவேசம் முதலியதைச் செய்து விடையளித்துவிட்டு, ஸர்வக்ஞபீடாரோஹணம் செய்தாரென்றும், அங்கு எல்லோராலும் ஆசார்யர் கொண்டாடப்பட்டாரென்றும் கூறப்பட்டிருக்கிறது.

இந்தக் கோவிந்தநாதீயத்தில் ஓர் விசேஷம்:— ஆசார்யர் மடத்தை ஸ்தாபித்த இடங்களும், அவற்றின் வரலாறும் இங்கே கூறப்படவில்லை. ஆசார்யர் காஞ்சியில் ஸர்வக்ஞபீடாரோஹணம் செய்துவிட்டுப் பிறகு கேரளத்திலுள்ள வ்ருஷாசலம் என்ற க்ஷேத்திரத்துக்குப் போய் அவ்விடத்திலேயே ஸித்தியடைந்துவிட்டார் என்று கூறப்பட்டிருக்கிறது.

வ்யாஸாசலீயத்தில் '**रुचितदेशमयं जगाम** - ஆசார்யர் இஷ்டமான தேசத்துக்குப் போனார்' என்று கூறியிருப்பதால் ஆசார்யருக்கு இஷ்டமான தேசம் கேரளமாகத்தான் இருக்குமென்று எண்ணி அவ்விதம் கோவிந்தநாதர் கூறியதாகத் தெரிகிறது; அது யுக்தமில்லை. ஆசார்யருக்குத் தேசாபிமானம் இருக்க நியாயமில்லை. கேரளத்தில் ஸித்தியானதாகச் சொல்வது, காஞ்சியில் ஸித்தியைக் கூறும் பல மூலசங்கரவிஜயங்களுக்கு விரோதமானதாலும் அது சரியன்று என்று அறியவும். கோவிந்தநாதர் என்ற கவி கேரள தேசத்தவரானபடியால் தமது

கேரள தேசாபிமானத்தை ஆசார்யரிடமும் ஏற்றி அவ்விதம் கூறியதாகக் கொள்ளலாம். குருரத்ன மாலிகையின் 33-ஆம் ச்லோக உரையில் ஸுஷமா காரர், கோவிந்தநாதீயம் என்ற கேரளீய சங்கர விஜயத்தில் உள்ளதான சில ச்லோகங்களைக் கூறுகிறார். அதில் ஆசார்யர் காஞ்சியிலேயே மடத்தில் இருந்தது, அங்கேயே ஸித்தி அடைந்தது முதலிய விவரம் காணப்படுகிறது. ஆகையால் கோவிந்தநாதீயத்தில் சிலர் பாடபேதம் செய்து விட்டதாகத் தெரிகிறது.

## 8. மாதவீய சங்கரவிஜயம்

மாதவீய சங்கரவிஜயமானது, ஆனந்தகிரீயம், பதஞ்சலி சரிதம், சங்கராப்யுதயம், வ்யாஸாசலீயம் முதலிய மேலே குறிப்பிட்ட சங்கரசரித்ர க்ரந் தங்களை மூலமாக வைத்துக்கொண்டு அந்த க்ரந்தங் களிலிருந்தும், ஜகந்நாத கவி, உமாமஹேச்வர சாஸ்த்ரி ஆகிய இருவர் எழுதிய இரு பகவத்பாத ஸப்ததி ஸ்தோத்ரங்கள், இன்னும் பல கவிகள் எழுதிய சங்கராசார்யரைப்பற்றிய க்ரந்தங்கள் முத லிய பலவற்றிலிருந்தும் பல ச்லோகங்களை ஸந்தர்ப் பானுகுணமாகத் தொகுத்து நவகாளிதாஸர் என்ற ஓர் நவீன கவி இயற்றியது என்ற விஷயம் மாதவீய சங்கர விஜயகாரரே கூறியிருப்பதால் ஆக்ஷேபிக்க முடியாத விஷயம். வ்யாஸாசலரை ஸ்பஷ்டமாகப் பெயர் சொல்லி, அவரையும், அவரது க்ரந்தத்தை யும் மாதவீயத்தில் கவி புகழ்ந்திருக்கிறார். இந்த

மாதவீயத்தில் பட்டபாதசிஷ்யரான விச்வரூபருக்கு மண்டனமிச்ரர் என்ற பெயரையே குறிப்பிட்டு அவரது பத்தினியும் ஸரஸ்வதியின் அவதாரமுமான உபயபாரதியை ஸாக்ஷியாக வைத்து விச்வரூபரை ஆசார்யர் வாதத்தில் ஜயித்துப் பிறகு அவரது பத்தினியின் தூண்டுதலால் அவளையும் வாதத்தில் ஜயிக்க விரும்பி அவளுடன் வாதம் செய்யும்பொழுது, அவள் காமசாஸ்த்ர ஸம்பந்தமான கேள்விகளைக் கேட்க, பரகாயப்ரவேசம் முதலியவை செய்து காமசாஸ்த்ரவிஷயங்களை அறிந்து அவளையும் ஜயித்து, விச்வரூபருக்கு ஸந்நியாஸாச்ரமம் கொடுத்து, அவரைச் சிஷ்யராக ஏற்றுக் கொண்டார்; ஸரஸ்வதி ப்ரஹ்மலோகம் போய் விட்டாள் என்று கூறப்பட்டிருக்கிறது.

ச்ருங்ககிரியில் ஆசார்யர் சாரதையின் ஆலய நிர்மாணம் செய்து, அதில் சாரதாப்ரதிஷ்டை செய்து, அவளுக்குப் பூஜை செய்யும்படி ஏற்பாடு பண்ணினர் என்றுதான் மாதவீயத்தில் 12-ஆம் ஸர்க்கத்தில் சொல்லியிருக்கிறது. அவ்விடத்தில் மடத்தை ஸ்தாபித்ததாகச் சொல்லவில்லை. அதைப் போலவே மாதவீயம் 15-ஆம் ஸர்க்கத்தில் காஞ்சியில் காமாக்ஷியின் ஆலய நிர்மாணம் செய்து காமாக்ஷிக்கு வேதஸம்மதமான பூஜையை ஏற்பாடு செய்ததாகச் சொல்லியிருக்கிறது. அங்கும் மட ஸ்தாபனம் செய்ததாகச் சொல்லவில்லை. வேறு எங்குமே ஆசார்யர் மடஸ்தாபனம் செய்த வரலாறு மாதவீயத்தில் கூறப்படவேயில்லை. மாதவீய

வ்யாக்யானத்தில் ஆனந்தகிரீய வாக்யத்தை உதா ஹரித்து ச்ருங்ககிரியில் மட நிர்மாணம் செய்த விஷயம் கூறப்படுகிறது. அப்பொழுது காஞ்சி யிலும் மடநிர்மாணம் செய்த வரலாறு அதே ஆனந்தகிரீயத்தில் சொல்லப்படுவதால் ஒப்புக் கொண்டுதான் ஆகவேண்டும்.

காசியில் சண்டாள ரூபியாய் வந்து பிறகு ஆவிர்பவித்த விச்வேச்வரருக்கும் பகவத்பாதருக் கும் ஸம்வாதம் நடக்கும் ப்ரகரணத்தில் மாதவீயம் 6-ஆம் ஸர்க்கத்தில்,

"मोहसन्तमसवासरनाथान् तत्र तत्र विनिवेश्य विनेयान् ।

पालनाय परतत्वसरण्याः मामुपैष्यसि ततः कृतकृत्यः ॥"

என்ற முன்கூறப்பட்ட வ்யாஸாசலீய ச்லோகம் அநுவதிக்கப்படுகிறது. அதில், 'பல இடங்களில் சிஷ்யர்களை ஸ்தாபனம் செய்துவிட்டுப் பிறகு என்னிடம் வருவாய்' என்று விச்வேச்வரர் ஆசார்ய ரிடம் சொன்ன விவரம் வர்ணிக்கப்படுகிறது.

"कतिचन विनिवेश्याथर्ष्यशृङ्गाश्रमादौ" (16-93)

என்ற மாதவீய ச்லோகத்தில், ஆசார்யர் ச்ருங்க கிரி முதலிய இடத்தில் சில சிஷ்யர்களை ஸ்தாபித்தார் என்றும் சொல்லப்படுகிறது. அதனால் ச்ருங்ககிரி, காஞ்சி முதலிய பல இடங்களில் சிஷ்யர் தங்கும் மடங்களின் ஸ்தாபனம் செய்த வரலாறு ஸூசிக்கப் படுகிறது.

மாதவீயத்தில் 16-ஆம் ஸர்க்கத்தில், ஆசார்யர் ஸர்வக்ஞ பீடாரோஹணம் செய்த வரலாறு கூறப்படும்பொழுது, வ்யாஸாசலீயத்தில் 12-ஆம் ஸர்க்கத்தில் கூறப்பட்ட ச்லோகங்களையே கூறி, காச்மீர மண்டலத்தில் தேவியின் ஆலயத்தில் ஸர்வக்ஞ பீடம் இருப்பது முதலிய கதை நிரூபிக்கப்படுகிறது. அந்தக் காச்மீர மண்டலம், வ்யாஸாசலீயம், அதன் வ்யாக்யானம் போல் அமைந்த கோவிந்தநாதீயம் இவைகளைக் கொண்டு, காஞ்சீ மண்டலம்தானென்று முன்பே கூறியுள்ளோம். அந்த ஸர்வக்ஞ பீடம் வித்யாபத்ராஸனம் என்ற பெயரால் மாதவீயத்தில் 12-ஆம் ஸர்க்கத்தில் 82-ஆம் ச்லோகத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. அந்தப் பீடத்தை மாதவீயத்துக்கு மூலமான ராஜசூடாமணி தீக்ஷிதர் இயற்றிய சங்கராப்யுதயம் 7-ஆம் ஸர்க்கம் 64, 65, 66-ஆம் ச்லோகங்களில் வித்யாபத்ராஸனம் என்ற பெயரால் கூறி, அது காஞ்சீபுரத்திலுள்ளதாகச் சொல்லுகிறது. அந்தப் பீடத்தில், பல வாதிகளை ஜயித்து ஆசார்யர் ஏறும் சமயத்தில் ஸரஸ்வதி தேவியானவள் ஆசார்யரை, 'உமக்குப் பரகாயப்ரவேச சமயத்தில் ஸ்த்ரீஸம்பந்தமூலமாக அசுத்தி ஏற்பட்டதால் நீர் பீடத்தில் ஏறுவது உசிதமில்லை' என்று தடுக்க, ஆசார்யர் 'இந்த யதி சரீரத்தில் அவ்வகையான தோஷமில்லை' என்று ஸமாதானம் கூறினர்கள் என்று வ்யாஸாசலீயத்தில் கூறியபடியே மாதவீயத்திலும் கூறப்படுகிறது.

மாதவீயத்தில் ஓர் விசேஷம்—வ்யாஸாசலீயத்தில் 'रुचितदेशमयं जगाम' என்ற வாக்கியத்துக்கு, இஷ்டமான தேசம் ஆசார்யர் போனர் என்று அர்த்தமானதால், ஆசார்யருக்கு இஷ்டமான தேசம் பதரியாயிருக்கலாமென்று மாதவீயகாரர் எண்ணியவராய்க்கொண்டு ஆசார்யர் பதரி போய்ப் பிறகு கேதாரம் சென்று கைலாஸம் போய்விட்டதாகக் கதையை முடித்திருக்கிறர். அது யுக்தமன்று. மாதவீயத்துக்கு வ்யாஸாசலீயம் போல் சங்கராப்யுதயமும் மூலமாயுள்ளது. இரு க்ரந்தங்களிலிருந்தும் ஏராளமான ச்லோகங்களை எடுத்திருப்பது போல் கதையையும் அநேகமாக அநுஸரித்திருக்கிறர் மாதவீயகாரர். அப்படியிருக்க, சங்கராப்யுதயத்தில் வித்யாபத்ராஸனம் என்ற ஸர்வக்ஞ பீடத்தில் ஏறிய பிறகு காஞ்சியிலேயே ஆசார்யர் தங்கிவிட்டதாகக் கூறப்பட்டிருப்பதால், அதற்கு விரோதமில்லாமல் வ்யாஸாசலீயத்திலுள்ள 'रुचितदेशमयं जगाम' என்ற வாக்கியத்துக்கு, 'காஞ்சியில் தங்கிவிட்டு முடிவில் தமக்கு இஷ்டமான கைலாஸம் போய்விட்டார்; அதாவது, காஞ்சியிலேயே ஸித்தியடைந்துவிட்டார்' என்று அர்த்தம் கூறுவதுதான் பொருத்தமாயுள்ளது. ஸித்தியை அடைந்ததையே கைலாஸம் போய்விட்டாரென்று சொல்வது வழக்கம். இவ்விதம் மூலக்ரந்தங்களை அநுஸரித்துச் சொல்லவேண்டியிருக்க, மாதவீயத்தில் வேறு விதமாகக் கூறுவது ஒப்புக்கொள்ளத் தக்கதல்ல என்பதை அறியவும்.

இன்னுமோர் விசேஷம்:— மாதவீயம் ஸர்வக்ஞ பீடாரோஹணத்தைத்தான் சாரதாபீடவாஸம் என்று கூறுகிறது. மாதவீயம் முதல் ஸர்க்கத்தில் 'षोडशे शारदापीठवासः' என்றதால், 16-ஆம் ஸர்க்கத்தில் ஆசார்யருடைய சாரதா பீடவாஸம் கூறப்படப் போகிறது என்று கூறிவிட்டு 16-ஆம் ஸர்க்கத்தில் ஸர்வக்ஞபீடாரோஹணம் செய்த வரலாற்றைக் கூறிவிட்டு, 'जयति यतिपतेः शारदापीठवासः' (16-18) என்று ஸர்வக்ஞ பீடத்தை, 'சாரதா பீடம்' என்று கூறுவதால், ச்ருங்ககிரியில் சாரதா பீடம் இருப்பதாக மாதவீய க்ரந்தமூலம்வெளியாகவில்லை. அதற்கு வேறு ப்ரமாணங்களை அந்வேஷணம் செய்ய வேண்டும். அவ்விதம் அந்வேஷணம் செய்யும் பொழுது, ஆனந்தகிரி சங்கரவிஜயம் ஒன்றில்தான் ச்ருங்கேரியில் பாரதீ பீடம் ஆசார்யரால் ஸ்தாபிக்கப்பட்டது என்று கூறியிருக்கிற படியால், ச்ருங்கேரியில் சாரதாபீடம் உண்டென்று கூறுகிறவர்களுக்கு ஆனந்தகிரீயம் பரம ப்ரமாணமாக ஆகிறது. அந்த ஆனந்தகிரி சங்கரவிஜயம் காஞ்சியில் காமகோடி பீடத்தையும் கூறுகிறபடியால் இரண்டையும் ஒப்புக்கொண்டுதான் தீரவேண்டும் என்று வாசகர்கள் அறியவும். ஆகவே மாதவீயத்தின்படியும், வ்யாஸாசலீயம் போலவே, பல மடங்கள் உண்டென்று தெரியவருகிறது.

## 9. சித்விலாஸீயம்

இது இன்னர் இயற்றியது என்று க்ரந்தத்தில் கூறப்படாத சங்கரவிஜயம். இது

ஆனந்தகிரி சங்கரவிஜயம், சங்கராப்யுதயம், மாதவீயம் முதலியவற்றில் சொன்ன பழைய கதைகளில் சிலவற்றை ஸ்வீகரித்துக்கொண்டும், புதிதாகச் சிலவ்ற்றை ஸ்வேச்சையாகக் கல்பித்தும் எழுதிய புஸ்தகம். இதில் ஆனந்தகிரீயம், மாதவீயம் இரண்டிலும்போல் மண்டனமிச்ரர் என்றே விச்வரூபரைக் குறிப்பிட்டு அவரை வாதத்தில் ஜயித்துப் பரகாய ப்ரவேசம் செய்து, காம சாஸ்த்ர ஸம்பந்தமான விஷயங்களை அறிந்து மண்டனமிச்ரரின் பத்தினியான உபயபாரதீ என்ற ஸரஸவாணியையும் ஜயித்து அவளை வனதுர்க்காமந்திரத்தால் பந்தனம் செய்து ப்ரஹ்மலோகம் போகாமல் தடுத்து அவளுடன் ச்ருங்கேரி போய் அவளை அங்கே ப்ரதிஷ்டை செய்த வரலாறு ஆனந்தகிரீயத்தை அநுஸரித்துக் கூறப்பட்டிருக்கிறது. காஞ்சீபுரத்தில் நகர நிர்மாணம், ஆலய நிர்மாணம், காமாக்ஷியின் ப்ரதிஷ்டை, ஸ்ரீசக்ர ப்ரதிஷ்டை என்ற விஷயங்கள் ஆனந்தகிரீய ரீதியிலேயே கூறப்பட்டிருக்கின்றன. வ்யாஸர் ப்ரம்மாவுடன் சேர்ந்து ஆசார்யரிடம் வந்து 16 வயது அதிகப்படி கொடுத்த கதையும் ஆனந்த கிரீயத்திலுள்ளபடி கூறப்பட்டிருக்கிறது.

"शङ्करश्शङ्करस्साक्षाद्व्यासो नारायणः स्वयम् ।
तयोर्विवादे सम्प्राप्ते किंकरः किं करोम्यहम् ॥"

"यस्त्वद्वैतमठे स्थित्वा भारतीपीठनिन्दकः ।
स याति नरकं घोरं यावदाभूतसंप्लवम् ॥"

என்ற இரு ச்லோகங்களும் ஆனந்தகிரீயத்திலுள்ளபடி இங்கு அநுவதிக்கப்படுகின்றன. ஸர்வக்ஞபீடம்

காஞ்சியிலுள்ளதென்றும், அங்கேதான் வாதிகளை ஜயித்து ஆசார்யர் ஸர்வக்ஞபீடாரோஹணம் செய்தாரென்றும் சங்கராப்யுதயத்தில் கூறிய படியே கதை இங்கு வர்ணிக்கப்படுகிறது. ஸரஸ்வதி வாதிகளை ஜயித்து ஸர்வக்ஞ பீடாரோஹணம் செய்யும்படி தூண்டியதாகச் சொல்லியிருக்கிறது. ஆனால் ஸ்த்ரீ ஸம்பந்த நிமித்தமாய் அசுத்தி ஏற்பட்டதால் ஏறக்கூடாதென்று ஸரஸ்வதி ஆசார்யரைத் தடுத்த வரலாறு கூறப்படவில்லை. காஞ்சியில் ஸர்வக்ஞபீடம் ஏறினபிறகு சிஷ்யர்களுக்குப் பாடம் சொல்லிக்கொண்டு ஒரு மாத காலம் ஆசார்யர் தங்கியதாகச் சொல்லியிருந்தாலும் அங்கு மட நிர்மாணம் செய்ததாகச் சொல்லவில்லை. பிறகு காஞ்சியை விட்டு ஆசார்யர் கிளம்பிவிட்டதாகக் கூறப்பட்டிருக்கிறது. ச்ருங்கேரியில் ஆசார்யர் சாரதாலய சமீபத்தில் ஒரு மடம் நிர்மாணம் செய்து வித்யாபீடத்தை ஸ்தாபித்து அங்கு ஸுரேச்வரரை ஸ்தாபித்ததாகவும், அவருக்கு ஸேது முதல் ஹிமாசலம் வரை தர்ம வ்யவஸ்தாபனுதிகாரம் கொடுத்ததாகவும், கோவிந்த பகவத்பாதர் சிவனிடத்திலிருந்து க்ரமமாகத் தம்மிடம் வந்த ரத்னகர்ப்ப கணபதியையும், சந்த்ர ஸ்படிகலிங்கத்தையும் ஆசார்யரிடம் கொடுக்க, ஆசார்யரும் ஸுரேச்வரரிடம் அவற்றைக் கொடுத்துப் பூஜித்துவரும்படி ச்ருங்கேரி மடத்தில் ஏற்பாடு செய்ததாகவும், ஸுரேச்வரரைக் கொண்டு பாஷ்யவார்த்திகங்களைச் செய்வித்ததாகவும், கிழக்குத் திக்கில் கீழ ஸமுத்திரக் கரையில் ஜகந்நாத

க்ஷேத்ரத்தில் போகவர்தனமென்னும் ஓர் மடத்தைக் கற்பித்து அதில் பத்மபாதாசார்யரை ஸ்தாபித்த தாகவும், மேற்குத் திக்கில் மேற்கு ஸமுத்திரக் கரை யில் த்வாரகாக்ஷேத்ரத்தில் ஓர் மடத்தை நிர்மா ணம் செய்து அதில் ஹஸ்தாமலகாசார்யரை ஸ்தாபித்ததாகவும், வடக்குத் திக்கில் பதரீ க்ஷேத் ரத்தில் ஓர் மடம் நிர்மாணம் செய்து அதில் தோடகாசார்யரை ஸ்தாபித்ததாகவும் கூறி, பதரி யில் வந்த தத்தாத்ரேயருடன் பேசிக்கொண்டு அவ ருடைய குகை சென்று பிறகு கைலாஸம் போய் விட்டதாகவும் இங்கே கதை கூறப்பட்டிருக்கிறது. ஆனந்தகிரீயத்தில், காஞ்சீ க்ஷேத்திரத்தில் ஆசார் யர் இருந்துகொண்டு பல சிஷ்யர்களைக் கொண்டு ஷண்மத ஸ்தாபனம் செய்த வரலாற்றை மாற்றி மாயாபுரீ என்ற க்ஷேத்ரத்தில் இருந்துகொண்டு ஷண்மத ஸ்தாபனம் செய்ததாகக் கூறப்பட்டிருக் கிறது. சித்விலாஸீயத்தில் ச்ருங்கேரி க்ஷேத்ரம், துங்கபத்ரா நதி இவ்விரண்டின் மஹிமை வெகு விஸ்தாரமாகப் பல அத்யாயங்களில் நிரூபிக்கப்படு கிறது. இந்தச் சித்விலாஸீயத்தில்தான் ஆசார்யர் நான்கு மடங்களை மாத்திரம் ஸ்தாபித்ததாகக் கூறப்பட்டிருக்கிறது.

## 10. குருவம்ச காவ்யம்

குருவம்ச காவ்யம் என்று ஓர் க்ரந்தம். இது ச்ருங்கேரி மடத்தின் ஆஸ்தான பண்டிதரான காசி லக்ஷ்மண சாஸ்திரிகள் என்பவரால் ஸ்ரீ ஸச்சி தானந்தபாரதீ ஸ்வாமிகளென்ற ச்ருங்கேரி பீடாதி

பதிகளின் ப்ரேரணையின் பேரில் எழுதப்பட்டது. ஏழு ஸர்க்கங்கள் இதில் இருக்கின்றன. ஆதியிலுள்ள 3 ஸர்க்கங்களில் ஆசார்ய சரித்ரமும், பிந்திய 4 ஸர்க்கங்களில் ச்ருங்கேரி மடத்தின் குரு பரம்பரையின் சரித்ரமும் கூறப்பட்டிருக்கின்றன. இந்த க்ரந்தம், ஆனந்தகிரீயம், சங்கராப்யுதயம், வ்யாஸாசலீயம் முதலியவற்றை அநுஸரித்து எழுதப்படுவதாக க்ரந்தகாரராலேயே கூறப்பட்டிருக்கிறது. அநேகமாக அதை அநுஸரித்தும் எழுதப்பட்டிருக்கிறது. விச்வரூபரை ஆசார்யர் வாதத்தில் ஜயித்தபிறகு அவரது பத்தினியான ஸரஸ்வதி ப்ரஹ்ம லோகம் போனதாகக் கூறியிருக்கிறது. காச்மீர தேசத்தில் சாரதாலயத்தில் ஸர்வக்ஞபீடமுள்ளதாயும் அதில் ஆசார்யர் ஏறும்போது ஸரஸ்வதிதேவி காம சாஸ்த்ர ஸம்பந்தமான கேள்விகளைக் கேட்க, பிறகு ஆசார்யர் பரகாய ப்ரவேசம் செய்து காம சாஸ்த்ர நுட்பங்களை யறிந்து பதில் சொல்லி, ஸர்வக்ஞபீடம் ஏறியதாகவும், ஸந்தோஷமடைந்த சாரதாதேவி வரம் கேட்கும்படி ஆசார்யரிடம் கூற ஆசார்யர் தம்முடன் வரும்படி தேவியைப் பிரார்த்தித்து ச்ருங்கேரியில் தேவியை ப்ரதிஷ்டை செய்து அங்கு மடத்தில் ஸுரேச்வரரை ஸ்தாபித்து, ரேவண சித்தரால் தம்மிடம் கொடுக்கப்பட்ட சந்த்ரமௌளீச்வர லிங்கத்தையும் ரத்னகர்ப்ப கணபதியையும் பூஜிக்கும்படி ஸுரேச்வரரிடம் கொடுத்துவிட்டுச் சிஷ்யர்களுடன் காஞ்சீபுரம் வந்து, காமாக்ஷியை ப்ரதிஷ்டை செய்து, அங்கு ஷண்மத ஸ்தாபனம் செய்துவிட்டுப் புறப்பட்டுவிட்டதா

கவும், ஜகந்நாத க்ஷேத்ரத்தில் மட நிர்மாணம் செய்து பத்மபாதரையும், த்வாரகா மடத்தில் ஹஸ்தாமலகரையும், பதரியில் நாராயண ப்ரதிஷ்டை செய்துவிட்டு ஜ்யோதிர் மடத்தில் தோடகாசார்யரையும் ஸ்தாபித்ததாகவும், இவ்விதம் நான்கு திக்குகளில் நான்கு சிஷ்யர்களை ஸ்தாபித்து விட்டுநேபாளதேசம் போய், சித்தேச்வரியைத் தர்சனம் செய்துகொண்டு, தத்தாத்ரேயரின் ஆச்ரமம் வந்து அவருடன் ஸல்லாபம் செய்துவிட்டுக் கைலாஸம் சென்றதாகக் கூறப்பட்டிருக்கிறது. வேறு சங்கரவிஜயங்களில் இல்லாத சில கதைகளும் இங்கே கூறப்பட்டிருக்கின்றன. இந்த க்ரந்தத்தில் 4 திக்குகளில் 4 மடங்களே ஆசார்யரால் ஸ்தாபிக்கப் பட்டன என்று சொல்லியிருந்தாலும், காசியில் மாத்திரம் நான்கு சிஷ்யர்களுக்கும் தமக்கும் வஸிக்க ஐந்து மடங்கள் ஸ்தாபித்ததாகக் கூறப் பட்டிருக்கிறது.

இவ்விதம் மேற்கூறிய சங்கர சரித்ர ஸம்பந்தமுள்ள பத்துப்புஸ்தகங்களில் குறித்துள்ள விசேஷங்களை நாம் தொகுத்துக் கூறினோம். இதில் சிவரஹஸ்யம், மார்க்கண்டேய ஸம்ஹிதை, ஆனந்தகிரீய சங்கரவிஜயம் என்ற மூன்று க்ரந்தங்களில் ஐந்து சந்த்ரமௌளீச்வர ஸ்படிகலிங்க வரலாறு கூறப்பட்டிருக்கிறது. பதஞ்சலி சரிதம், சங்கராப்யுதயம், வ்யாஸாசலீயம், கோவிந்தநாதீயம், மாதவீயம் என்ற ஐந்து க்ரந்தங்களில் ஸ்படிகலிங்க வரலாறு கூறப்படவில்லை. கூறாமற் போனாலும், '**अनुक्तमन्यतो ग्राह्यम्**' என்ற ந்யாயத்தால் முன்

க்ரந்தங்களில் கூறியிருப்பவைகளை இங்கும் க்ரஹித்துக்கொள்ள ஆக்ஷேபமில்லை. ஆனால் சித்விலாஸீயம் குருவம்சகாவ்யம் ஆகிய இரண்டிலும், ஆனந்தகிரீயத்தை அநுசரித்து எழுதியவையாக அவை இருந்தும், ஐந்து ஸ்படிகலிங்க வரலாறு கூறப்படவில்லை. அதைக் கூறும் பக்ஷத்தில் அந்த லிங்கத்தின் ஸம்பந்தமுள்ள காஞ்சீ காமகோடி பீட வரலாறு சொல்லும்படி நேர்ந்துவிடுமென்று பயந்து ஒரே சந்த்ரமௌளீச்வர லிங்கத்தை ரத்ன கர்ப்பகணபதியுடன் சேர்த்து, இது சிவனிடமிருந்து கோவிந்தபகவத்பாதரிடம் வந்ததாயும், அதைக் கோவிந்தபகவத்பாதர் சங்கராசார்யரிடம் கொடுத்ததாயும், அதை ஆசார்யர் ஸுரேச்வரரிடம் கொடுத்து ச்ருங்கேரியில் பூஜிக்கும்படி ஏற்பாடு செய்ததாகவும் சித்விலாஸீயம் கூறுகிறது. குருவம்ச காவ்யமோ ரேவண ஸித்தர் என்ற ஓர் யோகியின் மூலமாக ஆசார்யருக்குக் கிடைத்ததை ஸுரேச்வராசார்யரிடம் கொடுத்து ச்ருங்கேரி மடத்தில் ஸ்தாபித்ததாகக் கூறுகிறது. காஞ்சீ மடத்தை அபலாபம் செய்ய வேண்டுமென்ற ஒரே நோக்கத்தால் இந்த இரு க்ரந்தங்களும் சிவரஹஸ்யாதிகளில் கூறியுள்ள ஐந்து லிங்க சமாசாரத்தை மறைத்து நாலு திக்குகளில் நான்கு மடங்கள்தான் என்று கூற ஆரம்பித்தன. ச்ருங்கேரி மடத்தின் ப்ராதான்யத்தையே மனசில் கருதி, காஞ்சீ மடத்தை ஒப்புக்கொண்டால் அதற்கு ப்ராதான்யமில்லாமல் போகுமே என்று பயந்து, அதை மறைத்துவிட்டுப் பாக்கி நான்கு மடங்களுள்

ச்ருங்கேரி மடத்துக்கே ப்ராதான்யமென்று வர்ணித்து, பாக்கி மூன்று மடங்களைப் பெயரளவில் சொல்பமாகக் கூறிவிட்டு, ச்ருங்கேரி மடத்தையே விஸ்தாரமாக வர்ணித்து, ச்ருங்கேரி மடத்து அபிமானிகளால் எழுதப்பட்ட க்ரந்தங்கள் இந்த இரண்டும் என்பது, ஸ்பஷ்டமாக இவ்விரண்டு க்ரந்தங்களின் ப்ரவிருத்தியை நோக்குபவர்களுக்குத் தெரியாமல் போகாது.

சித்விலாஸீயம் என்ற க்ரந்தம் கி. பி. 1875-ஆம் வருஷத்தில் சென்னையில் வாவிள்ள ராமஸ்வாமி சாஸ்திரிகள் அச்சுக்கூடத்தில் முதல்முதல் தெலுங்கு லிபியிலும், பிறகு க்ரந்த லிபியிலும் அச்சிடப்பட்டது. அத்துடன் சிவரஹஸ்யத்திலுள்ள சங்கர ப்ராதுர்பாவாத்யாயமும், அதில் ச்ருங்கேரி வரலாற்றைப் புகுத்தியும், அதிலுள்ள காஞ்சீ மட வரலாற்றை எடுத்தும் அச்சிடப்பட்டிருக்கிறது. அந்தச் சித்விலாஸீய புஸ்தகத்தைப் பார்ப்பவர்களுக்கு இது நன்ருகத் தெரியும். ஆகையால் கி. பி. 1875-ஆம் வருஷத்தில் சிலர் ஒன்று சேர்ந்து காஞ்சீ மட அபலாபம், ச்ருங்ககிரி மட ப்ரகாசனம் என்ற இரு நோக்குடன் சிவரஹஸ்யத்தில் சில மாறுதல்கள் செய்ததோடு சித்விலாஸீயமென்ற ஓர் சங்கரவிஜய புஸ்தகத்தையும் பல பண்டிதர்கள் மூலம் பல க்ரந்தங்களிலுள்ள பழைய கதைகளையும் புதிய கதைகளையும் சேர்த்து, செய்தவர்பெயர் குறிப்பிடாமல், சென்னை நகரில் அச்சிட்டு வெளியிட்டார்கள் என்று தக்க ப்ரமாணங்களால் வெளியாகிறது. இவர்களே

ப்ராசீனமான ஆனந்தகிரி சங்கர விஜயத்தையும் பல பாடமாறுதல்கள் செய்து காஞ்சீ பீடத்தை மறைத்து ச்ருங்கேரி பீடத்தை மாத்திரம் ப்ரகா சப்படுத்திக் கல்கத்தா நகரில் அச்சிட்டு வெளியிட் டார்கள். இவர்கள் வெளியிட்ட சித்விலாஸீய சங்கர விஜயம் முதலிய க்ரந்தங்கள் சிவரஹஸ்யம் முதலிய முன் க்ரந்தங்களுக்கு விருத்தமாகையால் ஒப்புக் கொள்ளத்தக்கவை அல்ல. ஆகையால் ஆசார்யர் ஸ்தாபித்த மடங்களில் ஒன்றையுமே மறைக்காமல் வ்யாஸாசலீயாதிகளில் கூறப்பட்ட படி பாரததேசம் முழுவதும் பல மடங்களை ஆசார்யர் ஸ்தாபித்ததாக ஒப்புக்கொள் வதே விவேகமாகும். இன்றைக்கும் வடக்கிலும் தெற்கிலும் பல சங்கர மடங்கள் இருக்கின்றனவே. அதில் எதை எதற்குப் புதிய உபமடமென்று கூறு வது? ஒருவர் ஒன்றை உபமடமென்று கூறினால் மற்றவர் மற்றதை உபமடமென்று கூறுவதற்கு என்ன ஆக்ஷேபம் கூறமுடியும்? ஆகையால் ஒரு வரும் ஒரு மடத்தையும் அபலாபம் செய்வதில் வீண்ப்ரயத்னம் எடுத்துக்கொள்ளாமலிருப்பதே விவேகமாகும். நான்கு திக்குகளில் நாலு மடங்கள் தானென்று புதிய க்ரந்தங்களை இயற்றிப் பொய்ப் ப்ரசாரம் செய்பவர்கள் கவனிக்க வேண்டிய விஷயம் ஒன்று உண்டு. ஸ்ரீ ராஜவல்லப சாஸ்திரிகள் எழுதிய ந்ருஸிம்ஹபாரதீ விஜய காவ்யம் பூர்வ பாகம் முதல் ஸர்க்கம் 31-ஆம் ச்லோகத்தில்,

‘ प्रत्यासन्नं मणिगणविधेः पश्चिमाब्धेः प्रशस्तम् ’

என்று கூறியபடியும் ப்ரத்யக்ஷப்ரமாணப்படியும் ச்ருங்கேரி க்ஷேத்ரம் மேற்கு ஸமுத்திரக்கரையில் உள்ளது. அப்படியிருக்க, ச்ருங்கேரி மடம் எப்படித் தக்ஷிண திக்கில் ஸ்தாபிக்கப்பட்ட மடமாகும்? ஏதாவது ஓர் பூமத்யஸ்தானத்தில் இருந்து கொண்டுதான் இந்த இடம் கிழக்கு தெற்கு மேற்கு வடக்கு என்று திக்விபாகம் செய்ய வேண்டும். அப்பொழுது ஒரே மேற்கு ஸமுத்ரக்கரையிலுள்ள துவாரகை, ச்ருங்கேரி மடங்களை இது மேற்கு மடம் இது தெற்கு மடம் என்று எங்கிருந்து எப்படிப் பிரித்துக் கூற முடியும்?

ஸமுத்ரக்கரையிலில்லாமல் பதரியைப்போல் மத்தியத்திலுள்ள காஞ்சீ நகரத்திலிருக்கும் மடத்தைத்தான் மத்தியஸ்தானத்தில் இருந்துகொண்டு தெற்கு மடம் என்று கூறுவது பொருத்தமாகும். மேலும் மற்றத் திக்குகளில் துவாரகை பதரீ ஜகந்நாதம் என்ற ப்ரஸித்த க்ஷேத்ரங்கள் போல் தெற்குத் திக்கில் காஞ்சீ நகரம்தான் ப்ரஸித்தமான பழைய க்ஷேத்ரமாகும். அப்ரஸித்தமான ச்ருங்கேரி அதைப் போல் ஆகாது. ஆகையால் காஞ்சீ மடத்தைச் சேர்த்துத்தான் 4-திக்குகளில் 4-மடங்கள் என்று கணக்குப் போடுவது யுக்தமாகும். ஆகவே 4-திக்குகளில் 4-மடங்கள் என்று கணக்குப் போடுகிறவர்களுக்கு இஷ்டமான ச்ருங்கேரி மடம் ஸித்திக்காமல்போகுமானதால், மேற்படி பொய்க்கணக்குப் போடுவதை விட்டுவிட்டுப் பொய்ப்ரசாரம் செய்யாமல், 'பல ப்ரதேசங்களில் பல மடங்களை ஆசார்யர் நிர்மாணம் செய்தார்' என்று ப்ரமாணக்ரந்தங்

களை அபலாபம் செய்யாமல் ஒப்புக்கொள்வதே ஆசார்யர்களிடத்திலுள்ள ஸாத்துவிக பக்தியின் லக்ஷணமாகும்.

இதுகாறும் கூறியவற்ருல், ஆசார்யர் ஸ்தாபித்த மடங்கள் நான்கும் அல்ல, ஐந்துமல்ல, கணக்கற்ற பல மடங்கள் என்றும், 4-மடங்கள் தான் என்று ப்ரசாரம் செய்த சித்விலாஸீயம் குருவம்சகாவ்யம் ஆகிய இரண்டும் மூலக்ரந்தங்களுக்கு விருத்தங்களானதால் உபதேயங்களல்ல என்றும் முடிவாயிற்று. இன்னும் ப்ராசீன சங்கரவிஜயம். ப்ருஹத் சங்கரவிஜயம் போன்ற பழைய பல க்ரந்தங்களும் இந்த ஸித்தாந்தத்தையே தழுவியிருக்கின்றன. அவற்றை வேறு ஒரு ஸமயத்தில் விஸ்தாரமாக ஆராய்ந்தெழுதுவோம்.

சுபம்

